16th March 1961]

**SRI J. MATHA GOWDER :** சில பிளாக்குகளிலே கம்போஸ்டு இன்ஸ்பெக்டர்கள் நியமிக்காத காரணத்தினால், கிராமப்புறங் களிலே இதுபோன்ற கம்போஸ்டு உரங்கள் தயாரிக்க முடியாத நிலையிலிருக்கிறார்கள் என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா? அப்படியானால் எல்லா பிளாக்குகளிலும் இந்த கம்போஸ்டு இன்ஸ் பெக்டர்களை நியமிக்க அரசாங்கம் முன்வருமா?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** எந்த பிளாக்கி லாவது யோசனை சொல்லுவதற்கு இன்ஸ்பெக்டர்கள் இல்லை என்று ஏற்பட்டால் அந்த பிளாக்கிலுள்ளவர்கள் ஜில்லா கலெக்டர் அவர் களுக்குத் தெரிவித்தால் வேண்டிய உதவி அளிக்கப்படும்.

*Government Hospital, Vellore (Improvements)*

* 886 *Q.*—**SRI V. K. KOTHANDARAMAN :** கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) திரு. கோதண்டராமன், எம்.எல்.ஏ. அவர்கள் 1960-ம் வருடம் டிசம்பர் மீ 7-ம் தேதியில் (Director of Medical Services) அவர்களுக்கு எழுதிய வேலூர் சர்க்கார் ஆஸ்பத்திரி அபிவிருத்தியைப் பற்றிய லெட்டர் வந்து சேர்ந்ததா?

(இ) அதன்மீது எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** (அ) Yes, Sir.

(இ) The matter is under the consideration of the head of the Department.

**SRI V. K. KOTHANDARAMAN :** வேலூரில் தனியார் துறை யிலே நடத்தக்கூடிய மிஷன் ஆஸ்பத்திரியில் 3 பேஷண்டுகளுக்கு ஒரு டாக்டர் போட்டிருக்கிறார்கள். இங்கே 30 நோயாளிகளுக்கு ஒரு டாக்டர் என்ற நிலைமை இருக்கிற காரணத்தால், சரியான முறையில் அவர்களைக் கவனிக்க முடியாத நிலைமை ஏற்பட்டு, நம்முடைய ஆஸ்பத்திரிகளின் பேரில் தவறான எண்ணங்கள் உண்டாகின்றன. நோயாளிகளுடைய நோயை சரியான முறையில் கவனிப்பதற்கு மேலும் அதிகப்படியான டாக்டர்களைப் போடுவதற்கு சர்க்கார் ஏற்பாடு செய்யுமா?

**THE HON. SRI M. A. MANICKAVELU :** அந்தமாதிரியான எண்ணம் இப்பொழுது மாறிக்கொண்டு வருகிறது. 9 லட்சம் ரூபாய் செலவழிக்கிறோம். இந்த ஆஸ்பத்திரியிலே படுக்கைகள் அதிகம். வேண்டிய ஸ்டாபும் கொடுத்திருக்கிறோம். எந்த அளவுக்குக் கொடுக்கவேண்டுமோ அந்த அளவுக்குக் கொடுக்க முடியவில்லை. அதிகமான நோயாளிகள் வருகிறார்கள். வேண்டாம் என்று அவர்களை அனுப்பிவிட முடியாது. ஆனால் மிஷன் ஆஸ்பத் திரியில் வேண்டாம் என்று அனுப்பிவிடலாம். கனம் அங்கத்தினர் ஆஸ்பத்திரியில் இருந்தார். நானும் போய்ப் பார்த்தேன். எல்லாம் சௌகரியமாகத்தான் நடந்தது. (சிரிப்பு).

[16th March 1961

SRI V. K. KOTHANDARAMAN : கனம் அங்கத்தினரை மாத்திரம் கவனிப்பதற்காகக் கேட்கப்படவில்லை. ஏழை மக்கள் கவனிக்கப்படவேண்டும் என்பதுதான் நோக்கம். ஆகவே, அங்கே கண் ஆஸ்பத்திரி இருக்கிறதே. அதில் பணம் கொடுத்தால்தான் சேர்ப்பார்கள் என்பதும். . . . . .

MR. SPEAKER : தயவுசெய்து மிஷன் ஆஸ்பத்திரியைப் பற்றிக் கேள்வி கேளுங்கள் ?

SRI V. K. KOTHANDARAMAN : அந்த ஆஸ்பத்திரியில் ஐ டாக்டரோ அல்லது வெனிரியல் டிஸீஸ் டாக்டரோ கிடையாது. ஒரு ஆனரரி டாக்டர்தான் இருக்கிறார் என்ற காரணத்தால், மிஷன் ஆஸ்பத்திரிக்குப் போகவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. அங்கே பர்மனெண்டாக ஒரு ஐ டாக்டரையும் வெனிரியல் டிஸீஸ் டாக்டரையும் உடனடியாக நியமிக்க முயற்சி எடுக்கப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : வெனிரியல் டிஸீஸ் டாக்டர் அங்கே இருக்கிறார். ஏழைகளுக்கு என்று கேட்க ஆரம்பித்து, தனக்கு இல்லை என்கிறார் அங்கத்தினர். அவர்கள் பணக்காரர்களோ என்னவோ ; அப்படியானால் அவர்கள் எப்பொழுது பணக்காரர் ஆனார், எப்படி ஆனார் என்று தெரியவில்லை. (சிரிப்பு).

*Removal of Sand heaps (Kanyakumari district)*

MR. SPEAKER : As the hon. Member Sri T. S. Ramaswamy, who gave notice of question No. 887 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

*887 Q.—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the steps taken by the Government to remove the sand-dune heaped in the villages of Puthenthurai and Kovalam in the Kanyakumari district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : At Puthenthurai, a major portion of the sand heap has already been cleared by the Public Works Department by utilizing a bulldozer. The Public Works Department has also been allotted sufficient funds to clear the sand heaps at Kovalam by using a bulldozer. In addition to removal of the sand heaps, steps have been taken to raise wind-belts, i.e., belts of trees and shrubs which will bind the sand and reduce the speed of the wind and thus prevent the formation of sand heaps.

*President's awards to teachers*

* 888 Q.—SRI A. VEDARATHNAM : கனம் நிதி அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் எத்தனை ஆரம்ப உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களுக்கு என்னென்ன திறமைகளுக்காக ராஷ்டிரபதி விருதுகள் இவ்வாண்டு வழங்கப்பட்டன ?